# அப்பம்

## தேவையான பொருட்கள்:

மைதா மாவு - 200 கிராம்
அரிசி மாவு - 1 கரண்டி
வெல்லம் - 100 கிராம்
ஏலக்காய் - 2

## செய்முறை:

வெல்லத்தை தூள் செய்து ஒரு கரண்டி நீர் விட்டு கரைத்து வடிகட்டிக் கொள்ளவும். அதில் மைதா, அரிசி மாவு, ஏலக்காய் சேர்த்து நன்றாக கரைத்துக் கொள்ளவும். ஒரு வாணலியில் எண்ணெய் விட்டு காய்ந்ததும் அடுப்பை சிறியதாக எரிய விடவும்.ஒவ்வொரு கரண்டி மாவை விட்டு அப்பம் வெந்ததும் திருப்பி சிவந்ததும் எடுக்கவும். மாவில் வாழைப்பழத்தை சேர்த்து அப்பம் செய்யலாம்.

